ழவே விரும்புகிருர்கள்.
சுகமென்றும் இரண்டு
ல் உயிர்கள் போல
க முடியாதவை. தற்
ற்று சரீர சுகமுடைய
ஆத்ம சுகமுடையவர்கள்
அரிதாக இருக்கின்றது.
பார்கள் சரீர சுகத்தை
தவில்லை. ஆத்ம சுகத்
அதற்கு வேண்டிய சகல
ழகிஞர்கள். தர்மசாஸ்
வேதாங்கமான கலைகளி
வெகு விஸ்தாரமாகக்
அதன்படி யனுஷ்டித்து
முடையவர்களாக வாழ்ந்
இருக்கும் பரம்பொருளை
னமுடியவில்லையோ, அது
அனுபவித்தறிய வேண்டி
முடியாது. உதாரணமாக
க்கிருேம். அதில் ஜீவன்
அந்த ஜீவன் போய் விடு
தெரிந்து கொள்கிருேம்.
ருக்கிறது, அது என்ன
கொண்டு வந்து நிறுத்து
ம. அதற்காக ஜீவனில்லை
ப மாட்டார்கள். ஆத்ம
ங்கள் தான் ஸத்கர்மாநுஷ்



டானங்கள். அவைகளைச் செய்வதெப்படி என்பதை அறிவிப்பவைகளே வேதங்களும் வேதாங்கமான கலைகளுமாகும். ஆத்மசுகமற்ற சரீரம் நச்வரம், நாசமடையக் கூடியது, ஜீவச்சவம் என்று சொல்லலாம்; அதாவது ஜீவனுள்ள நடைப்பிணமாகும்.

மிருகங்களுக்கு இயற்கையாகவே ஆத்ம சுகமும் சரீர சுகமும் அமைந்திருப்பதால் அவைகள் உள்ளும் புறமும் ஒத்து வாழ்கின்றன. ஆனல் மனிதனுக்கு அது போல் முடிவதில்லை.

“ஆஹாரநித்ராபய மைதுனஞ்ச ஸாமன்ய மேதத் பசுபிர்நராணும்! ஞானம் நராணும் அதிகோ விசேஷ: ஜ்ஞானேநஹீநா : பசுபிஸ்ஸமாநா :‖” என்றபடி பசு பக்ஷிகளுக்கு ஆகாரம் நித்திரை, பயம், ஸங்கமம், இவை தர்மா தர்மவிவேக மில்லாமலிருக்கின்றன. மனிதனைத்தவிர மற்ற ஜீவராசிகளில் ஆண் பெண் என்று இரண்டுதான். உண்டு அவைகளுக்குத் தங்கை பென்றும், தாரமென்றும் வித்தியாசமிருப்பதில்லை; மானம், அவமானம் என்கிற பேதமும் இருப்பதில்லை ; ஆகையால் அவைகளுக்கு எந்த சாஸ்திர ஆதாரமும் அவசியமில்லை; எதையும் யோசித்துச் செய்யவேண்டியு மிருப்பதில்லை. மனிதன் அதுபோல் இருக்க முடியா தென்பது ஸகலரும் அறிந்தவிஷயம். இவனிடம் தர்மா தர்மவிவேகம் சிறந்து விளங்குகின்றது. ஆகையா தான் மனிதனே சகல ஜீவராசிகளிலும் சிறந்தவனக கருதப்படுகிருன். மனிதனல் தன்னை எந்த சமயத்திலு நல்வழிப்படுத்திக் கொள்ளமுடியும். மற்ற ஜீவரா ளால் அவ்வாறு செய்துகொள்ள முடியாது. மனித ஒரு ஊருக்குப் போகவேண்டியிருந்தால் காரணமென் காரியமென்ன, நல்லவேளை எது' எந்த சமயம் புறப்

ஏதோ ஓர் வகையில் கூடியவரை சரீரசுகத்தை அனுபவித்தே வருகிறார்கள்.

இச்சரீரம் ஒரு அரண்மனையைப் போன்றதாக வைத்துக்கொள்வோம். அரண்மனையின் வெளிப்பக்கத்தை மாத்திரம் நன்றாகச் சுத்தம்செய்து வைத்துக்கொண்டால் பார்வைக்கு அழகாக இருக்கிறது. வசிக்கும் உட்புறத்தை நன்றாக சுத்தப்படுத்தி வைத்துக்கொள்ளின் வஸிப்பதற்கு உபயோகமாக இருக்கிறது. சுகவாழ்விற்கு இவ்விரண்டுமே தான் அவசியமாக விருக்கிறது. இப்படியுள்ளதில் முற்காலத்திலிருந்த நம்முன்னோர்கள் வெளிப்பூச்சான விஷயங்களை முக்யமாக கருதவில்லை, அந்தரங்க சுத்தமான வாழ்க்கையையே பிரதானமாகக்கருதி ஒழுகி வந்தார்கள். ஆகையால் தான் அவர்கள் வெளிப்பார்வையான பகட்டில் தோற்றமளிக்காமல் ஆத்மாநந்தத்துடன் ஸர்வ அந்தர்யாமியான கடவுளின் அருளுக்குப் பாத்திரர்களாய் க்ஷேமமாக வாழ்ந்து வந்தார்கள். இப்படிப்பட்டவர்களின் செய்கையால் நிறைகுடம்போல் உலக க்ஷேமமும் நன்றாக இருந்து வந்தது. தற்காலத்தில் அதுபோன்ற விஷயங்களை அநேகர் அறவே ஒழித்துவிட்டு மேற்பூச்சான விஷயங்களையே பிரதானமாகக்கொண்டு பெரும்பாலோர் ஒழுகுகிறார்கள். வெளிப்பார்வைக்கு மாத்திரம் அவர்கள் மஹாசுகிகளாகவே காணப்படுகிறார்கள்; ஆத்ம சுகமுடையவர்களாக இல்லை. நம்முன்னோர்கள் மேற்பூச்சான சில விஷயங்களில் அலக்ஷியமாக இருந்துவிட்டார்கள். தற்காலத்தியவர்கள் உள்ளந்தரங்கமான பல விஷயங்களில் அலக்ஷியமாக இருக்கிறார்கள். ஆகையினால்தான் உலகில் ஜீவசக்தியைப்போன்ற அஸ்திவார பலமான க்ஷேமங்கள் குறைந்து அளவிட முடியாத பல கஷ்டங்கள் ஏற்பட்டு

வார்கள்) களுடைய ஜாதகங்களால் அவர்களுடைய அதிருஷ்டம், பூர்வபுண்யம் எப்படியிருக்கின்றன, விவாஹம் செய்விப்பதற்கு வதூவரர்களுடைய வயக்கிரமம் சரீரதிருடம்-ஆகிருதி அங்க அவயவலக்ஷணங்கள் சரியாகவிருக்கின்றனவா வென்பவைகளையும்-மற்றும் சகலப் பொருத்தங்களும்-ஜாதகங்களின் அமைப்பும் தசா பலன்களின் யோகங்களும் நன்றாக இருக்கின்றனவா, தம்பதிகள் புத்திர பௌத்ராபி விருத்தியுடன் சுகிகளாக வாழ்வார்களா பெற்றோர்கள் பெரியோர்களின் அபிப்பிராயம் எவ்விதமிருக்கின்றது கடவுள் கிருபை எப்படி என்பதையெல்லாம் சாஸ்திரக்ஞர்களையும் ஜோதிஷர்களையும் கேட்டும் சகுனங்களால் கடவுளின் சம்மதத்தை அறிந்தும் விவாஹாதி சகல சுபங்களையும் வேதமுறைப்படி செய்வித்து வந்தார்கள். அப்படியே தம்பதிகளும் கிரஹஸ்தாஸ்ரம தர்மத்தின்படி புஷ்பமும் மணமும்போல் வாழ்ந்து வந்தார்கள். குலவிளக்காக விளங்கினார்கள்.

அநேகமாக அதுபோன்ற விஷயங்களை யெல்லாம் தற்காலத்தில் டவர் கவனிப்பதேயில்லை. முக்கியமாய் அவர்கள் கவனிப்பது, பிள்ளை இங்கிலீஷ் எவ்வளவு படித்திருக்கிறான், என்ன உத்தியோகம் செய்கிறான், தற்கால நாகரீக முறைப்படி சிகரெட் உண்டா புல் சூட்டுடனும் கிராப்புடனும் பார்வைக்கு அழகாக இருக்கிறானா, என்பனபோன்ற விஷயங்களையே பெரிதும் ஆராய்கிறார்கள். இதையே பிரதானமாகக் கருதுகிறார்கள.

அப்படியே பிள்ளை வீட்டுக்காரர்களும் பெண் சிவப்பாகவும் தற்கால நாகரீக முறைப்படி பேஷனாகவும் உதட்டில் சாயப் பூச்சுடனும் அழகாக இருக்கிறாளா, இங்கிலீஷ் படித்திருக்கிறாளா, பழைய பைத்தியங்களைப் போல் புருஷனுக்கு அடங்கிநடப்பதும் மஞ்சள் பூசிக்

து சமையல் வேலை
ம்ரக்ஷணை செய்வதும்
புத் தேய்த்துக்கொள்
பவுடர் ஒத்திக்கொள
புறப்பட்டால் புருஷ
ப்பாளா, புருஷனை
ாடு நடு ரோட்டில்
ப் பேசிக்கொண்டு
சு முதலிய விடங்களி
கிருளா, முக்யமாக
படுகிருளா ஹார்மோ
ளா, இந்த குணங்க
னவா, என்பதையே
கர் கவனிக்கிருர்கள்.
அறியாமையே யாகும்.
திருஷ்டமாக சற்று
கவனிப்பது எட்டிப்
பார்த்து விரும்பு
விஷமாகிவிடுகின்றது.
அதிர்ஷ்டம் என்ப
ஜாதக பலன்கள்,
கிடையாது என்று
உடலமைப்பில் மேற்
ப்பவர்கள் சகலரும்
விடுவார்களா? பகட்
க்ஷணமுடையவர்கள்
ாக இருந்து விடுவார்
வர்கள் அதிருஷ்டம்
ணுதியச விசேஷங்கள்



எப்படி இவற்றை எல்லாம் அவர்கள் ஜாதகங்களைக் கொண்டு சற்று கவனிப்போம் என்று கூடப் பலபேர் நினைப்பதில்லை. அவர்கள் இந்த கருப்பு, சிவப்பையே பிரதானமாக நினைக்கிருர்கள். இதற்காக, நான் படிப்பில்லாத குரூபியான பிள்ளைதான் நல்லதென்றும், கருப்பான அங்க ஹீனமான பெண்தான் விவாஹத்திற்கு உத்தமமானதென்றும் சொல்லுவதாக யாரும் நினைத்துவிடவேண்டாம். கூடியவரையில் சாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரப்படி உத்தம லக்ஷணங்களைப் பிரதானமாகக் கவனிக்கவேண்டியது அத்யாவசியந்தான். இதை நானும் ஒப்புக்கொள்கிறேன். கருப்பான கரும்பைவிட சிவப்பான எட்டிப்பழமே மேல் என்று நினைத்துவிடுவது தான் தவறென்று சொல்லுகிறேனே தவிர வேறில்லை. இதன் அர்த்தத்தை யாரும் அனர்த்தமாய்ச் செய்துவிட வேண்டாம். கலப்பு மணங்களும் தற்காலத்தில் பல நடக்கின்றன. இதனுலும் தம்பதிகளின் சுபயோகங்கள் நாளடைவில் நசித்துவிடுகின்றன். இது மிகவும் பாபமும் அதர்மமுமாகும். இதன் குரூரம் ஆரம்பத்தில் பலருக்குத் தெரியாவிடினும் பிறகு கிரமேண இதனுல் பல கஷ்டங்கள் ஸம்பவிக்குமென்பது ஸர்வநிச்சயம். இக்காலத்தில் ஜாதி குலம் மதம் வர்ணுச்ரமம் இவைகளைப்பற்றி பேசுவதற்கே பயமாக விருக்கிறது இது விபரீதமாகும். உத்தமர்கள் இதை அறிவார்களாக.

ஜாதகயோகப்படி பூர்வ புண்ய முடைய தர்மிஷ்டர்களான தம்பதிகள் மேற்பூச்சானவைகளால் அதிக ஆடம்பரமான அழகுடையவர்களாக இல்லாவிடினும் மஹா பாக்கியசாலிகளாக க்ஷேமமாக வாழ்வார்கள் என்பது நிச்சயம். இது சாஸ்த்ர ஸம்மதமான விஷயம். அனுபவத்தில் நடப்பதும் அப்படியே. உலகில் ஒருவருக்கு விவாஹத்தி

வாழ்க்கை விஷ வாழ்க்கையாகவும் மெஷின் வாழ்க்கையாகவும் ஆகிவிடுகிறது. இப்படிப்பட்ட தம்பதிகளே தற்கால உலகில் அதிகமாக இருக்கிறார்கள். இவர்கள் மூலமாக ஜனிக்கும் சந்ததிகளும் "பிது: சதகுணம் புத்ர:" என்றபடி, பிதாவைப்போல் நூறு பங்கு குணமுள்ளவன் புத்திரன் என்றபடி, ஆத்மபலம் சரீர திருடமில்லாத பலஹீனர்களாக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் உலகில் ஏற்பட்டுவிட்ட பிறகு தர்ம சாஸ்திரங்களும் வேதமும் வேதாங்கமான ஜோதிஷம்போன்ற கலைகளும் அவற்றை அப்யஸிக்கும் அபாக்ய சாலிகளான ஜோதிஷர்களும் தாழ்வடைவதில் என்ன ஆச்சரியம்! இப்படி யெல்லாம் உலகம் மாறிவிட்டதைப் பற்றியும் மாறிவருவதைப் பற்றியும் உத்தமர்களான புத்திசாலிகள் வருத்தப்பட வேண்டியிருக்கிறது.

"ஏகோபி குணவான் புத்ர: நிர்குணேன சதைரபி |
ஏகசந்த்ர ப்ரகாசேன நக்ஷத்ரை: கிம் ப்ரயோஜனம் ||"

என்கிறபடி நக்ஷத்திரங்களைப்போல் பிரகாசமற்ற நூறு புத்திரர்கள் இருந்தபோதிலும் என்ன பயன்? சந்திரனைப்போன்ற தேஜஸ்வியான ஸத்புத்ரன் ஒருவன் ஜனித்தாலும் அவனே உலகோர் உகப்பதற்குரியவன் என்பது நமது முன்னோர்களின் அபிப்பிராயம்.

தற்கால உலகில் எத்தனையோ கோடிக்கணக்கான தம்பதிகள் குடும்ப வாழ்க்கையை நடத்துகிறார்கள். உத்தம வீரர்களாகவும் தேஜஸ்விகளாகவும் சரீரதிருடமும் மனோபலமும் பொருந்தியவர்களாயும் பாரமார்த்திக புத்தியுடையவர்களாகவும் பராக்கிரம சாலிகளாகவும் சில நூற்றுக்கணக்காகவும் தற்கால உலகில் புத்திரர்கள் கிடையாது இப்படிப்பட்ட புத்திரர்கள் ஜனிக்கவில்லையே, இதற்கு காரணம் என்ன வென்பதை யாரேனும் யோசிக்கிறார்

டக்கணக்கான குழந்தைகள்
வருகின்றன. இப்படியெல்
ன் காரணம் தர்மசாஸ்திரங்
ம் தர்மம், அதர்மம், பாபம்,
அனுசாரம் என்பவற்றையும்
ய்து விட்டதுதான் என்ப
இவ்வாருன பிசகுகளிலிருந்து
நும் க்ஷேமமாக வாழவேண்டு
ச்ரம தர்மத்தையும் ஸதாசார
கு அறிந்து அதன்படி நடக்க

தற்காலத்தியவர்களைப்போன்ற
ளாதவர்களாய் மெஷின்களின்
டப்பட்டும் ஸதாசார அனுஷ்
ாரியங்களையும் செய்து வந்தார்
மனநிம்மதியுடனும் சிந்தையில்
டையவர்களாய் தேஜஸ்விகளாக
தர்ம சாஸ்திரங்களையும் வேதங்
ஸ்திரங்களையும் நம்பி தர்ம நியாய
வந்தார்கள். அவர்கள் வாழ்க்கை
உத்தம வாழ்க்கையாகவிருந்தது.
கள் தங்கள் சந்ததிகளையும் தர்
வழிகளில் பழக்கி வந்தார்கள்.
தேவோபவ, பித்ரு தேவோபவ,
அதிதி தேவோபவ" என்கிறபடி
ன் அதிதிகளிடம் பயபக்தி விச்
ந்தார்கள். இக்காலத்தில் அநேக
விஷயங்களைப் பலர் நினைப்பதும்
ளுக்குச் சரீரபலமும் கிடையாது,



மனோபலம் அடியோடு கிடையாது. உலகில் தனமும் தேஜஸ்
ஸும் அன்பும் ஆதரவும் பசு பக்ஷிகளின் க்ஷேமம் யாவும்
பகல் விளக்காய் பயன்படாமல் பிரகாச மற்றிருக்கின்றன.
புண்ணியபலக் குறைவாலும் கடவுளின் கோபத்தாலும்
ஜனங்களுக்குச் சிந்தையும் மனவேதனையும் பேராசையும்
பொருமையும் குடி கொண்டிருக்கின்றன. பரஸ்பர நம்
பிக்கையும் விசேஷமாய்க் கிடையாது.

இவ்விஷயங்களெல்லாம் கிரமேண சீர்திருந்த வேண்
டும். அப்போதுதான் அநேகருக்குத் தரும சாஸ்திரங்
களும் வேதங்களும் ஜோதிஷம் போன்ற கலைகளும்
என்ன என்ருவது புலப்படும். இதுபோன்ற விஷயங்
களை உத்தமர்கள் அனைவரும் உணர்ந்து நடந்து கொள்
ளாதவரை, எத்தனைதான் ஜோதிஷத்தைப் பற்றி எழு
தினுலும் பேசினுலும் செவிடன் காதில் ஊதிய சங்கா
கவே இருக்குமென்று நான் எண்ணுகிறேன்.

## கிரஹஸ்தாச்ரம தர்மம்

ஸதா காலமும் ஸந்துஷ்டியுடன் உலகில் சகலரும்
சுகமாக வாழ்வதே ஜனசமூகத்தின் சிறந்த லக்ஷியம்.
இது யாவரும் அறிந்த விஷயம். சகலரும் இதை
இச்சிக்கிருர்கள். பல ஆச்ரமிகளும், அந்தந்த ஆச்ரம
நிலைமைக்குத் தக்கபடி இன்பத்தை அனுபவிக்க
விரும்புகிருர்கள். இதில் வைதீகம், லௌகிகம் என்று
இரண்டு விதமாக இருக்கிறது. வைதீக மென்பவை,
பிரம்மசரியம், விரக்தம், வானப்ரஸ்தம், வைராக்கியம்
சன்யஸ்தம் போன்றவைகள். இவற்றிற்கு நிவ்ருத்தி
மார்க்கமென்று பெயர். லௌகிகம் என்பது இவ்வுலக
வாழ்க்கையில் பற்றுதலும் புத்திர பவுத்ராதிகளிடம்

பயம். (பர்த்ருஹரி). இதன்படி ஆராய்ந்து பார்த்தால், உலகிலுள்ள ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு காரணத்தினால் பயத்தை உண்டு பண்ணக்கூடியதாக இருக்கின்றது. எப்படியென்னில், எப்பொழுதும் சுகந்த பரிமளமான புஷ்பம், சந்தனம் முதலிய அலங்காரங்களுடன் அழகிய மடந்தையர்களோடு கூடி சிற்றின்பத்தை அனுபவிப்போ மென்றாலோ எந்தச் சமயம் ரோகம் வந்து விடுமோ என்று பயமுண்டாகிறது. விஷய சுகத்தை யனுபவிக்க யத்தனித்தால் தாதுக்களுடைய குறைவும் ரோகங்களின் விருத்தியும் ஸம்பத்தின் நாசமும், புண்ணியபலம் குறைதலும் ஸௌபாக்யம், தேஜஸ், யசஸ், முதலானவைகளின் நாசமும் உண்டாகின்றமையால் பயம் உண்டாகிறது. ஸத்குலத்தில் ஜனித்தவரா யிருப்போமென்றாலோ பிரஜை (ஸந்தானம்) இல்லாத வரையில் பலனில்லை. பணக்காரனாக இருப்போம் என்றாலோ அரசர்களாலும், திருடர்களாலும் வேறு பல வகையாலும் பயமுண்டாகிறது. கௌரவமாக இருந்து காலத்தைக் கழிப்போம் என்றாலோ தாரித்ரியம் பீடிக்கின்றது. பலிஷ்டனாக இருப்போம் என்றாலோ எவன் பலமுள்ளவனோ அவனுக்குச் சத்ரு விருத்தமாயிருப்பதால் பயம் உண்டாகிறது. அழகுள்ளவனாக இருபபோம் என்றாலோ கிழத்தனம் வேங்கைப் புலிபோல் கர்ஜித்துக் கொண்டிருப்பதால் பயம் உண்டாகின்றது. சகல சாஸ்திரங்களிலும் வல்லவனாக இருக்கலாமென்றாலோ தர்க்க வாதங்களில் தோல்வி, அவமானம் அடைந்து விட்டால் என்ன செய்வது என்கிற பயம். நல்ல குணமுள்ளவனாக ஸ்நாநம் ஸந்தி முதலியவைகளைச் செய்து கொண்டிருப்போம் என்றாலோ, துஷ்டர்கள் இதெல்லாம் வெறும் வேஷம் என்றும், ஆத்மார்த்தமாய்ச் செய்யவில்லை என்

நன்ருக அறியவேண்டும். இதுபோன்ற விஷயங்களை தெரிவிப்பதிலும் ஜோதிஷம் மிகவும் உபயோகமாக இருக்கின்றது.

ஸம்ஸார வாழ்க்கையான கிரஹஸ்த ஆசிரமத்தில் எவ்வளவு செளகரியங்களிருப்பினும் சில சமயங்களில் வெறுப்பு ஏற்படாமலிராது. எவ்வளவு நேர்மையாக அமைக்கப்பட்ட குடும்பத்திலும் நோயும் கஷ்டமும் துக்கமும் உண்டாகமலிரா. “தர்மார்த்த காமமோக்ஷாணும் ஆரோக்யம் மூலகாரணம்” என்கிறபடி குடும்ப வாழ்க்கையில் சகல்வித புருஷார்த்தங்களையும் அடைய ஆரோக்யமே மூல காரணமாயிருக்கின்றது. நல்ல சரீர ஆரோக்கியத்திற்கு கிரஹஸ்தர்கள் ஸ்வதர்ம கர்மானுஷ்டானங்களை விடாது அனுஷ்டித்து வரவேண்டும். ஆகார நியமம், ஸந்தியா வந்தனம், ஸ்நானம், பானம், ஸத்தியம், கடவுள் வழிபாடு, முதலியவைகள் முக்கியமானவை. இவற்றைப்பற்றி நம் முன்னேர்கள் தீர ஆலோசித்துப் பல நல்ல வழக்கங்களையும் மதக் கோட்பாடுகளையும் ஏற்படுத்தியிருக்கிருர்கள். தற்கால நாகரிக முன்னேற்றத்தால் பலர் எப்படி கண்ணிற்குக் கண்ணை ஜோதிஷ சாஸ்திரத்தை அலக்ஷியம் செய்கிருர்களோ அது போலவே கிரஹஸ்த ஆசிரம தர்மத்திலும் ஸதாசார அனுஷ்டானங்களை அலக்ஷியம் செய்கின்றனர். அதன் பலனாக வாலிபர்களும் ஆரோக்ய நியமங்களை அறியாது விதேசியப் பழக்க வழக்கங்களால் பலவாறு துன்புறுகின்றனர். பலர் நோய்வாய்ப் பட்டு வாழ்க்கையின் லக்ஷியத்தையும் இழக்கின்றனர். கிரஹஸ்தர்களின் அன்பே உலக க்ஷேமத்திற்கு அடிப்படையானது; ஜன சமூக லக்ஷியத்தின் திலகம் போன்றது. இந்தப் பேரன்பு முதலில் குடும்பத்திலிருந்தே ஆரம்பமாகிறது. இது

சாஸ்திரத்தின் ஆதாரத்தால் கண்டறியலாம். அவ்வாறு கண்டறிவதற்கு சிசுஜனிக்கும் சமயத்திய கிரஹங்களின் ஸ்திதியும், அவ்வப்போது கிரஹங்கள் மாறுவதின் கணக்குகளும் ஜனனகால ஜாதகக் குறிப்பும் கிரஹங்களின் அமைப்பும் அத்தியாவசியம். இக்கிரஹங்களின் நிலைமைகளைக் கொண்டே நடக்கப்போகும் பலன்களை ஜோதிஷர்கள் குறிப்பிட்டுச் சொல்லுகிறார்கள். ஜோதிஷ சாஸ்திரமானது வானநூலின் உதவியை அநுசரித்தே ஏற்பட்டுள்ள சாஸ்திரமாகும். ஆஸ்திக ஹிந்துக்களில் கிரகஸ்தர்கள் அனைவரும் இந்த சாஸ்திரத்தின் உதவியின்றி எந்த சுபகாரியங்களையும் செய்வதில்லை. இதன் ஆதாரத்தைக்கொண்டு செய்யும் சகல காரியங்களும் நற்பலனையே அளித்து வருவதனால் இது அனைவராலும் போற்றப்பட்டு வருகின்றது. சகல தேசங்களிலும் இந்தவழக்கம் இப்பொழுதும் இருந்து வருகின்றதென்பது சகலரும் அறிந்த விஷயம். ஜோதிஷமானது வெகு காலமாகவே வெவ்வேறு விதமாகப் பல தேசங்களிலும் பலராலும் கையாளப்பட்டு வருகிறது. இது ஒரு சிறந்த சாஸ்திரம் என்பதை சகலரும் ஒப்புக் கொள்ளுவார்கள். இந்த சாஸ்திரத்தைப் பழக்கத்தில் வைத்துக் கொண்டு பலன் சொல்லுவதில் தேர்ச்சியுடையவர்கள் இக்காலத்திலும் அநேகர் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு ஜாதகத்தைக் கொண்டு தங்கள் ஆராய்ச்சியின் வல்லமையால், நடந்த சம்பவங்களையும், நடக்கின்ற நிலைமையையும், இனி நடக்கப்போகிற யோகாவயோகங்களைப்பற்றிய சகல விஷயங்களையும் சொல்லுகிறார்கள். அநுபவத்தில் பலன்கள் அவர்கள் சொல்வதுபோல் நடக்கின்றன. ஆகையால் இதை சகலரும் நம்ப வேண்டியிருக்கிறது. இதன் விஷயம் தெரிந்த எவரும் இந்தசாஸ்திரத்தின் மேன்மையைப்

அந்த தேசங்களுக்குப் போய் நற்பலனை அடையலாம். கஷ்டத்தை அறிந்து கொள்வது போல் நன்மைகளையும் அறிந்து கொள்ளலாம். அவரவர்கள் ஜாதகத்தைக் கொண்டு விரும்பியவை கிடைப்பதற்குச் செய்ய வேண்டிய உபாயம், பிரயாசம், உபாஸனை ஆகியவைகளையும் கண்டறியலாம். பிணி வாய்ப்பட்டு துர்மரணமாக இறவாமலும், பிணிகள் வரக்கூடிய காலங்களை அறிந்தும் அவைகளைத் தவிர்க்கக் கூடிய முறைகளையும் ஜோதிஷத்தின் உதவியால் கண்டறிந்துவேண்டிய ஜாக்கிரதைகள் செய்து கொள்ளலாம். கடவுள் பக்தி செய்து விடா முயற்சியால் மார்க்கண்டேயன் என்றும் பதினாறு வயது சிரஞ்சீவியானது போல் நாம் நமக்குத் தகுந்தபடி உபாயங்களைச் செய்து அபமிருத்யு நேரிடாமலாவது தடுத்துக் கொள்ளலாம். இவ்வளவு அருமையான சாஸ்திரத்தைத் தற்கால நாகரீகத்தின் கொடுமையால் அநேகர் புறக்கணித்து வருவது அறியாமையின் காரணமே யன்றி வேறில்லை.

ஜோதிஷ சாஸ்திரம் வேதாங்கமானது ஆகையால் அது தெய்வத் தன்மை பொருந்தியதாகும். மணற்கேணியில் தோண்டத் தோண்ட ஊற்று சுரப்பதுபோல், நாம் எவ்வளவுக் கெவ்வளவு ஜாதக பலன்களை ஆழ்ந்து யோசிக்கிறோமோ அதற்குத் தக்கபடி அற்புதமான விஷயங்கள் பல நமக்குப் புலப்படும். பலனடைதற்கான நன் மார்க்கங்கள் மனதில் உதிக்கும். அனுபவத்தில் அவ்விஷயங்களைக்கொண்டு முயற்சித்து பலன்களைச் பரீக்ஷித்தால் அப்பலன்கள் சரியாக நடப்பது தெரிய வரும். ஆகையால் இது சரியான பலன்களைத் தெரிவிக்கும் பிரத்யக்ஷ சாஸ்திரம். இதில் சந்தேகமே கிடையாது. உதயாஸ்தமனங்கள் எவ்வளவு பிரத்யக்ஷமாகவும் கணக்காகவும் இருக்கின்றனவோ அம்மாதிரியே இந்த சாஸ்

ருன்னேற்றத்தாலும் யுகபேதத்தினுலும் கவனிக்க வேண்டியவை அநேகம் உண்டு. அவற்றில் சிலவற்றை மாத்திரம் இங்கே குறிப்பிடுகிறேன். தற்காலத்தில் அநேகர் ஆங்கிலப் படிப்பில் தேர்ந்த நிபுணர்களாக இருக்கிருர்கள். அவர்களுக்கு தர்ம சாஸ்திர விஷயங்களிலும் வேதாங்கமான ஜோதிஷத்தைப் போன்ற கலைகளிலும் உறுதியான நம்பிக்கை கிடையாது. இவ்விஷயத்தை இது வரையிலுமே பல தடவைகள் சொல்லியிருக்கிறேன். உதாரணமாக, வித்தியா இலாகாவில் எவ்வளவோ பிரிவுகளை ஏற்படுத்தி படிப்பிக்கிருர்கள். அவைகள் எல்லாவற்றிலும் விசேஷமாய் சரீர ரக்ஷணைக்காக வேண்டிய விஷயங்களே அடங்கி இருக்கின்றன. ஆத்மார்த்த விஷயங்களுக்கு அநுகூலமானவை அநேகமாய் எதுவும் கிடையாது என்றே சொல்லலாம். மேலும், தற்காலத்தில் முயற்சியே பிரதானம், பகுத்தறிவே முக்கியம்; நாம் ப்ரத்யக்ஷத்தில் அனுபவிக்கும் சுகம் தவிர வேறென்றும் கிடையாது; தர்மாதர்ம விவேகம்கூட ஏதோ கட்டுப்பாடே தவிர அதையெல்லாம் கவனிக்கவேண்டிய அவசியமில்லை என்று பலர் அவ்விஷயங்களைக் கவனிக்காமல் ஒதுக்கி விடுகிருர்கள். ஆத்மார்த்தமான க்ஷேமத்திற்கு ஹேதுவான ஜோதிஷ விஷயமாய் ஏதேனும் அவர்களிடம் சொன்ன போதிலும், "எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது" என்கிருர்கள். அப்படியா—ரொம்பசரி—ஆமாம் தாங்கள் நம்பும் சாஸ்திரமாவது ஏதேனும் இருக்கிறதா? தாங்கள் நம்புவது போலும் நினைப்பது போலும் எல்லாம் நடக்கின்றதா? அதையாவது எனக்குத் தெரிவித்தால் நானாவது தாங்கள் சொல்வதை நம்புகிறேன், அதையே அநுஷ்டிக்கிறேன் என்ருல், அது என்னவோ ஸார் அப்படி ஒன்றும் சொல்ல எனக்குத் தெரியாது.

அவர்கள் எதையும் மனவலிமையோடு சகிப்பார்கள்.
அவ்வளவு பரிபக்குவ மடைந்தவர்களை ஜோதிஷரும்
வணங்கிவிட வேண்டியது தான். அவர்களுக்கு இவ்வுல
சம்பந்தமான அநித்திய பதவியிலும் ஆசையிராது. அவர்
களை பகவான் தான் ரக்ஷிக்க வேண்டும் என்று அவர்கள்
விஷயத்தில் நாம் சும்மா இருந்துவிடலாம் இப்படிப்பட்ட
வர்களுக்கு ஜோதிஷத்தின் உதவி எக்காலத்திலும் அவ
சியமில்லை என்பதை நாமும் ஒப்புக் கொள்கிறோம் இவர்
களைத் தவிர்த்து உலகில் சம்சார ஸாம்ராஜ்யத்தில் ஈடு
பட்டுள்ளவர்களெல்லோருக்கும் இந்த ஜோதிஷ சாஸ்
திரத்தின் உதவி எல்லா காலங்களிலும் மிகவும் அவசிய
மாக வேண்டியே இருக்கிறது. "ஸம்ஸார ஸாகரம்
துக்கம் தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:" என்கிறபடி சம்
சாரம் மஹா துக்ககரமானதும் அனுபவித்தே தீர வேண்
டிய மின்னல் போன்ற ப்ரமையுடன் கூடிய மாயா ரூபி
யாகவும் இருக்கின்றது. காப்பாற்ற முடியாமலும் கை
விட மனம் வராமலுமிருப்பதே ஸம்ஸாரம் இதில் கூடிய
விரையில் சகல விஷயங்களையும் அறிந்து நடந்து கொள்
பவனே அதிகக் கவலையும் கஷ்டமும் இன்றி கூடிய வரை
மன நிம்மதியுடன் சுகப்பட முடியும். எப்படியெனில்
ராத்ரிக்கு வேண்டிய சகல தேவைகளையும் பகலில்
சேகரித்து வைத்துக்கொள்வதை எப்படிப் பிரதானமாக
எண்ணுகிறோமோ, அதற்கு முயற்சி செய்து சேகரித்துக்
கொள்வதனால் எப்படிப்பலன் அடைகிறோமோ, அது
போலவே தனக்கு எதிர் காலத்துக்கு வேண்டிய சகல
ஸாதனங்களையும் சேகரித்துக் கொள்ளவும். ஸமஸ்த
விஷயங்களையும் அறிந்து நடந்து கொள்ள வேண்டியதும்
மிகவும் அவசியமாயிருக்கிறது. இதுபோல் தன்பூர்வ
புண்ணிய பலன்களை நன்றாக வறிந்து நடந்து கொள்பவ

முயற்
வாழ
சாஸ்
ரியான
வடைய
து.
வலையை
க்காலத்
லிருக்க
இருக்கி
என்று
ம் செய்
ட்டைப்
க ஆப்த
ப்பிட்ட
த சமயத்
மூலமாக
பிரகாச
ரணமாகி
விடத்தில்
ாகவும்
க்களின்றி
ரமுடிகின்
தவியாகிய
க பாக்யங்
ம் தம் இஷ்
னுல் எற்
காலமாகிய
பவர்களாக



இருக்கின்றேம். நம் கால பலனுகிய வழியைத் தெரிந்து கொண்டால் தான் அவ்வழிக்குத் தக்கபடி வேகமாகவோ நிதானமாகவோ-பக்குவமாக நடந்து செல்லலாம். குறித்தவிடம் போய்ச் சேர அதியாக அலையாமலும் சுகியாகவும் இருக்கமுடியும். ஆகையினுல் தான் அதற்கு வேண்டிய சாதனமாகிய ஜோதிஷரூபமான விளக்கொளியையும் ஆப்த நண்பர்களாகிய ஜோதிஷர்களேயும் விரும்புகிறேம். நம் காலபலனுகிய கஷ்ட சுக மாறுபாடான வழியை ஜோதிஷ விளக்கொளியால் தெரிந்துகொண்டால் தான் நமது வேலைகளில் அதி வேகமாகவோ வெகு நிதானமாகவோ நடந்து கொள்வதற்கு புத்தி தீக்ஷண்யமும் மனதிற்குச் சமாதானமும் ஏற்படும். சகல வேலைகளேயும் சரிவர தைரியமுடன் செய்யமுடியும். அப்படி செய்யப்படும் வேலைகளே பரம திருப்திகரமாயும் பலன் தருவனவாயும் அமையும். நன்றாகவும் முடியும். இப்படிப் பட்ட கார்யங்களால் தான் சத்கீர்த்தியையும் சம்பத்தையும் அடையலாம். இதுபோன்று செய்பவர்களே ஆபத்தின்றி சகல வேலைகளிலும் கூடுமானவரையில் ஜயமடையமுடிகின்ற தென்பது சகலருக்குந் தெரியும். இதுவே பெரியோர்களின் அபிப்பிராயமாகும். அனுபவத்தில் நடப்பதும் அப்படியே. ஆகையால் தான் சகலரும் ஜோதிஷம் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம் என்கிறேம். நமது பூர்வபுண்ணிய பலங்களேயும் யோகாவ யோகங்களேயும் நன்றாக அறிந்துகொள்ளும்படி பகவான் கருணையாக இச்சாஸ்திரத்தை நமக்கு அருளியிருக்கிறா நதிப்பெருக்கில் அகப்பட்ட ஒருவனுக்கு கரையேற பொருட்டுக்கிடைத்த புணையைக்கொண்டு அவன் அங் ணம் புரியாமல் கடலே அடைவதேபோல் நாம் இ ஜோதிஷ சாஸ்திரத்தை அலக்ஷியம் செய்வதனுல்

பார்த்துக்கொள்ளவேண்டும் எனப்படுகிறது. அப்போது தான் சகலரும் சபபலனை அடையமுடியும்.

குணகிராஹ்யம்

இக்கால நாகரீகத்தின் விளைவாகவும், கலியுகமகிமையாலும், விதேசியப்படிப்பு, வேதவேதாந்த சாஸ்திர ஆராய்ச்சியின்மைபோன்ற மற்றும் சில காரணங்களாலும் உலகில் அநேகர் குணகிராஹ்யர்களாக இருப்பதில்லை. தர்ம சாஸ்திரங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சரியாக இருப்பினும் அவைகளைப் புகழ்ந்து விரும்பி கற்று பழக்கத்தில் அனுஷ்டிப்பதில்லை. தர்ம சாஸ்திரங்களில் ஏதேனும் ஸ்வல்பகுறை வெற்றிலைக்குப் பழமிராததுபோல் இருக்குமானல் அதையே பிரதானமாகக்கொண்டு பிரமாதப்படுத்துகிறார்கள். 'ஸர்வம் தோஷமயம் ஜகத்' என்கிறபடி சகல விஷயங்களும் உலகில் தோஷமயமாகவே தான் இருக்கின்றன. மற்றும் "திவஸோ குணதோஷாப்யாம் விமிச்ரஸ்யாத் பரஸ்பரம்| கேவலம் குணஸம்யுக்தோ தேவானமபி துர்லப:" என்றபடியே ஒரு தினத்தில் ஒரு விஞடி காலம் கூட தோஷமில்லாததாக இருக்கமுடியாதென்றும் குண தோஷங்கள் கலந்தே இருக்கின்றன என்றும், ஆகையால் பிரும்மாவின் ஜகத் சிருஷ்டியில் உள்ள எந்த வஸ்துவும் எந்த ஜீவராசியும் குணதோஷமுடையதாகவே இருக்குமென்றும் இருக்கிறதென்றும் மஹரிஷிகளால் சொல்லப்படுகின்றது. ஆகையால் உத்தமர்கள் சகலரும் எந்த விஷயத்திலும் எந்த சாஸ்திரங்களிலும் எந்த வஸ்துவிலும் எந்த ஜீவராசிகளிடமும் உள்ள குணத்தையே ப்ரதானமாகக்கொண்டு கிரஹித்து சுகப்படவேண்டும் என்றும் தோஷம் அதிகமாக இருக்

கொள்பவனுகத் தானிருக்கவேண்டும். நாம் குண கிராஹ, யர்களா யில்லாவிடில் இவ்வுலகில் பலராலும் பழிக்கப் படுவதுடன் கடவுளின் கோபத்திற்கும் ஆளாகி மீளா நரகத்தையும் அனுபவிக்க நேரிடும் என்பது நிச்சயம். இப்படிப்பட்டவர்கள் இவ்வுலக வாழ்வில் எவ்வித வேலை யிலும் வெற்றியடைய முடியாது. அப்படியின்றி அனை வரும் எல்லா விஷயங்களிலும் சகலரிடமுமுள்ள குணத் தையே கிரஹித்து தானும் தன்னிடமுள்ள உத்தம குணத்தையே சிரமேற்கொண்டு ஒழுகி வருவார்களாகில் சகல வேலைகளிலும் வெற்றி யடைவதுடன் ஸ்வர்கானு பவமான சுகபோக பாக்யத்தையும் கடவுளின் அருளால் கிடைக்கப் பெறுவார்கள். "ஸஹஸா விததீத நக்ரியாம் அவிவேக: பரமாபதாம் பதம், வ்ருணுதேஹி விம்ருச்ய காரிணம் குணலுப்தாஸ் ஸ்வயமேவ ஸம்பத:" என்கிற படி ஆய்ந்தோய்ந்து பாராது மஹா பாதகமான துஷ்கார் யங்களைச் செய்வார்களாகில் அவிவேகியாவதுடன் பல ஆபத்துக்களுக்கும் அகால மரணத்திற்கும் ஆளாகி விடு வார்கள். தீர ஆலோசித்து சிறந்த காரியங்களைச் செய் வார்களாகில் சூரிய சந்திரர்கள் உள்ள வரையில் அழி யாப் புகழுடனும் ஸகலராலும் நமஸ்கரிக்கத் தக்கவர் களாக வாழ்வார்கள் என்பது ஆன்ரேர்களின் அருள் வாக்கு. இதுதான் மேலே குறிப்பிட்டுள்ள சுலோகத் தின் தாத்பர்யம். முதலாவதாக நம்மிடமே அநேக அவய வங்கள் அவகுண முடையனவாக இருக்கின்றன என் பதை ஆராய்வோமானல் பிறருடைய அவகுணத்தைப் பொருட்படுத்தவே மாட்டோம் என்று நாம் மேலே சொன்னோம். அதன்படி ஸதா காலத்திலும் நமது அவய வங்களிலுள்ள சிறந்த குணத்தையே நாம் சிரமேற் கொண்டு திருப்தி யடைந்து சுகப்படுகிறோம். அது

டையநற்குணத்தையே மேற்கொண்டு
லாம்; திருப்தியாகவு மிருக்கலாம்.
நமக்கு அத்யபூர்வமான குணமுடை
வயவங்கள் இயற்கையாக அமைந்தி
, கண், மூக்கு, உடல் முதலான ஜீவ
திலுள்ள குணங்களை நாம் கிரஹிப்
து அவகுணங்களை கிரஹிப்பது நலமா
யாசிக்கும் பக்ஷத்தில் குணத்தையே
கிரஹிக்கவேண்டும் என்பதை அறி
மாக மூக்கில் சளி வழிதல் விரும்பக்
அவகுணத்திற்காக அதன் அபூர்வ
லது மூக்கையோ இழக்கத் துணிகி
மா? என்பதை யோசித்துப் பாருங்
வ பல அவயவங்களிலும் பல அவ
திருந்தும் ஸர்வேச்வரனல் அளிக்கப்
உடலை எவ்வளவு பவித்திரமாகப்
ருமை யடைகிறோம் என்பது யோசிக்
நாம் நமது அவயவங்களிலுள்ள
மே கிரஹித்து வருகிறோம் என்பதி
த்தாவது ஸந்தோஷத்துடன் வாழமுடி
தக் கவனிப்போமானல் பிறருடைய
ம் சிறிதும் பொருள்படுத்தவே மாட்
வரிடமும் உள்ள நற்குணத்தையே பிர
த்து சுகப்படுவோம் என்பதை சகல
யலாம்.
டமுள்ள அவகுணங்களை நாம் நிவர்த்
சொல்லலாம். அதுபோலவே நாம்
குணத்தையும் நிவர்த்திக்க முயலவேண்
ல்லையேல், குணத்தையேனும் கிரகிக்க



வேண்டும். அப்போது தான் நாம் மேன்மை யடைய முடியும். பலராலும் ஒருவன் புகழப்படுவதற்கும், இகழப்படுவதற்கும் அவன் அநுஷ்டானமே முக்யகாரணம். நாம் ஒருவரின் குணத்தையே விசேஷமாகப் பாராட்டிப் புகழ்ந்து கொண்டாடி வருவோமானல் நாளடைவில் அவரிடம் சில அவகுணங்களிருப்பினும் அவை தாமாகவே விலகுவதுடன் அவரும் குணக்ஞராகவே இருக்க முயற்சிப்பார். அன்றியும் அவர் தம்மை திருத்திக் கொள்வதுடன் நம்மிடம் விசேஷ மதிப்புடன் நாம் சொல்வதைக் கேட்டு நடக்கவும் முற்படுவார். ‘சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை’ என்று பெரியோர்கள் சொல்லி யிருப்பதை ஒவ்வொருவரும் ஊன்றி கவனிக்க வேண்டும். நாம் அறிவாளனென்றும் குணக்ஞன் என்றும் பலராலும் கொண்டாடப்பட்டு வாழவேண்டுமானல் நாம் ஸாமான்ய மனிதர்களிடமுள்ள உத்தமகுணங்களையும் கிரஹிக்கவேண்டும். நம்மால் முடிந்தவரையில் சகலருக்கும் நல்லுபதேசம் செய்து வரவேண்டும். நாமும் வேதாகம தர்ம சாஸ்திரப்படி நடக்கவேண்டும். பிறருக்கு உபதேசிப்பதுபோல் நாமும் ஒழுகவேண்டும். சிலர் நம்மை முகஸ்துதி செய்பவன் என்று சொன்னலும்கூட நாம் பலரின் உத்தம குணத்தையே கொண்டாடி வரவேண்டும். அவகுணம், குரோதம் இவை நெருப்பைப்போன்றவை. சத்குணம், சாந்தம் இவை ஜலத்தைப் போன்றவை. ஜலத்தைக்கொண்டு நெருப்பை அணைப்பது போல ஸத்குணத்தின் பலத்தைக்கொண்டே அவகுணத்தைப் போக்கவேண்டும். இதுபோல் செய்வது சகலருக்கும் ஸாத்யமான விஷயந்தான். இது ஒரு பிரதானகலை என்பதை ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டும். இதுபோல் சகலரும் நடக்க முயற்சித்து செய்யின் உலகிலுள்ள

லாம். அப்படியும் உலகில் இருக்கமுடியாது, இருக்கமுடிவதில்லை. ஒரு தனி மனிதன் ராஜ்யபாரம் தான் செய்யமுடியுமா? அல்லது சேவகாவிருத்தி தான் செய்யமுடியுமா என்பதை யோசித்துப் பார்த்தால் சகலர் உதவியும் எவருக்கும் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வோர் வகையில் வேண்டியே இருக்கிறது. நாம் எந்த அனுகூலத்தையும் பிறருடைய உதவியின்றி அடைய முடிவதில்லை, முடியாது. ஆகவே ஒவ்வொருவரும் பரஸ்பரம் ஒருவர் தயவை மற்றொருவர் எதிர்பார்த்தே ஆகவேண்டியிருக்கிறது. பிரபுக்களுக்கும் ஜோதிஷர்களின் அன்பும் ஆசியும் நல்லுபதேசமும் அவசியமாக வேண்டி இருக்கின்றது. ஜோதிஷர்களுக்கும் தன உதவி முதலியன பிரபுக்களால் வேண்டி யிருக்கின்றது. இப்படி பரஸ்பரம் உபகாரிகளாயும் குணக்ராஹ்யர்களாகவும் இராத பக்ஷத்தில், தந்தியில்லாத் தம்பூர்போல, ஒருவரும் பிரகாசிக்க் முடியாமல் போய்விடும். தற்காலம், உலகில் தூஷணையும் பொறாமையும் கொண்டு உள்ளன்பின்றி மேலுக்காக பேசுவதும் நடிப்பதுமாகவே அநேகர் இருக்கிறார்கள். இதனால் தான் ஆண்டிமுதல் அரசன் வரையில் வித்தியாஸமின்றி அவர்களின் நிலைமைக்குத் தக்கபடி வாழ்க்கையில் தத்தளிக்கிறார்கள். இது ஒழிந்து சகலரும் சுகமாக வாழவேண்டில் உலகில் சகலரும் பரஸ்பரம் குணக்ராஹ்யர்களாக இருக்கவேண்டியது மிகவும் அவசியமாகும். முற்றும் துறந்த முனிவராக இருந்தபோதிலும் பிறருடைய உதவியைச் சிறிதும் கோராமலிருக்க முடியாது என்பது எமது அபிப்பிராயம்.

விரக்தவைராக்யர்களின் விஷயமே இப்படி இருக்கும்போது கிரகஸ்தர்களின் நிலையைப்பற்றி கேட்பானேன்? கிரகஸ்தர்கள் ஸம்ஸார ஸாம்ராஜ்யத்தில் சகலவித

மான சுகானுபவமுடனும் களத்திர புத்திராதிகளுடனும் தனது திறமையில் பல வழியிலும் தன விருத்திசெய்து சுகப்படவேண்டி யிருக்கின்றது. இப்படி இருப்பவர்கள் தர்மசாஸ்திரங்களின் உதவியும் ஜோதிஷத்தின் ஆதரவு இன்றி சுகமாய் வாழமுடியுமா? கிரகஸ்தர்களில் பலருடைய உதவியும் ஒருவருக்கிருந்து ஸகல சாஸ்திர விஷயங்களையும் அறிந்தவராக விருப்பின் அவர் உலகில் ஸித்திபெறுத காரியமே கிடையாது என்று சொல்லலாம். ஆகவே சகலரும் உள்ளன்புடன் பரஸ்பரம் குணகிராஹியர்களாக இருந்து வேதாங்கமான இந்த கண்ணுக்குக் கண்ணான ஜோதிஷ சாஸ்திரத்தை சிறப்புறச்செய்து இதனாலான பலனை பரிபூரணமாக அடையவேணுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

## ஜனன காலமும் கிரஹ நிலைகளும்

ஜனனகால கிரஹநிலைகளுக்கும் அவைகளாலான பலன்களுக்கும், நம் யோகாவயோகங்களுக்கும் சம்பந்தம் உண்டு என்பதே அநேகருக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணக் கூடியதாக இருக்கலாம். எங்கேயோ வெகுதூரத்துக்கப்பாலுள்ள கிரஹத்திற்கும், கிரஹநிலைகளுக்கும், நம் ஜனன கால வேளைக்கும் என்ன சம்பந்தம், இது ஏதோ விசித்திரமாக விருக்கின்றதே என்று பலர் நினைக்கிறார்கள்.

இது விஷயம் எப்படியெனில், பூமிக்கும், விதைக்கும், எருவிற்கும், ஜலத்திற்கும், வெயில்காற்று மழைக்கும், ருதுவிற்கும், ருதுமாறுதலுக்கும், செடிக்கும் அதிலுண்டாகும் புஷ்பத்திற்கும் பழத்திற்கும் எப்படி பரஸ்பரம் சம்பந்த மிருக்கின்றதோ அதைப் போன்றதே தான் ஜனனகால கிரஹநிலைக்கும் தசாயோக பலனுக்கும்



அதற்குத் தக்கபடி ஒன்றோடொன்று ஒட்டியதாக நாம் அனுபவிக்கும் சுபாசுப பலனுக்கும் சம்பந்தமிருக்கிறது. இதுதான் இதன் மூலதத்வம்.

இதை அந்தந்த சாஸ்திரங்களில் பயிற்சியும் தேர்ச்சியு முடைய ஆராய்ச்சியாளர்கள் தான் சரியாக அறிய முடியுமேயன்றி, ஸாமானியர்களால் அறிய முடிவதில்லை, முடியாது. பூமியில் தான் சகலவிதமான மரங்களும் செடி கொடிகளும் பூண்டுகளும் உண்டாகின்றன. ஆயினும், பூமியின் தரத்திற்கும் மற்ற சத்தின் உரத்திற்கும் தக்கபடி விருக்ஷங்களின் செழிப்பும் செடிகளின் வளமும் பலம் புஷ்பங்களின் சிறப்பும் எப்படி ருசியிலும் மணத்திலும் மாறுதல்களுடையனவாக இருக்கின்றனவோ அதைப்போலவே தான் ஜனனகால வேளாபலத்திற்கும் அக்கால கிரஹவலிமையின் நிலைகளின் உச்ச ஸ்வக்ஷேத்திர நீச்ச அஸ்தங்கத பலாபலத்திற்கும் தக்கபடியும் மாதாபிதாக்களின் பூர்வபுண்ய பாப விசேஷத்திற்கும் தகுந்தபடியே நாம் அனுபவிக்கும் சுபாசுப பலனும் மேன்மையாகவோ ஸாமான்யமாகவோ இருக்கின்றன. இதையறிய, அதாவது செடி கொடி முதலியவைகளைப் பற்றி அறிய, தாவர சாஸ்திரம் எப்படியோ, அதைப் போலவே மானிடர்களின் பலனை நிர்ணயித்துச்சொல்ல ஜோதிஷ சாஸ்திரம் பேருதவியாக இருக்கின்றது. ஆகையினால் தான் ஜனனகால ஜாதகமும் அந்த சமய கிரஹநிலைகளின் நிர்ணயமும் வேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதன் பலாபலங்களை அனுசரித்தே ஒவ்வொருவருக்கும் நடக்கப்போகிற பலனைச்சொல்ல வேண்டியிருக்கிறது. ஆகையால் தான் ஜனனகால ஜாதகமானது ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டியது மிகவும் அவசியம் என்கிறோம்.

வும் தெளிவாகவும் சொல்லி விடலாம். இதுபோல் சொல்லப்படும் பலனால் ஒருவன் தன் பூர்வபுண்ய பலனையும் தம் வாழ்வில் நடக்கப்போகும் பலனையும் சரிவர தெரிந்து கொண்டவனாகிறான். தனது பாக்ய விசேஷத்தை முன்னதாகத் தெரிந்து கொள்வதால் ஒருவன் தனக்கு அதிக சம்பத்து வரும்போது கர்வப்படாமல் அடக்கமாக விருந்து அதை விருத்தி செய்துக்கொள்ளவும் கஷ்டங்கள் நேரிடும்போது சஞ்சலப்படாமல் தைரியமாக விருந்து அதை எதிர்த்து நின்று முயற்சியால் வென்று அவற்றை நிவர்த்தித்துக் கொள்ளவும் முடிகின்றது. ஜாதகபலனை தெரிந்து கொள்வதானது இதுபோல் நியாயமான வழியில் பிரவேசித்து ஜெயமடைய அனுகூலமாக இருக்கிறது. இதை யாரும் மறுப்பதற்கில்லை. இதுவே ஜாதகபலனை தெரிந்து கொள்வதாலான பலன். இதுபோல் தனது ஜாதக யோகத்தின்படி ஒருவன் தன் நிலைமை, ஸம்பத்து, தான் நடந்துகொள்ள வேண்டிய விதம் இவைகளைத் தெரிந்து கொள்ளாமல் இருந்து விடுவானேயானால் அவன் உலகில் தன் பூர்வபுண்யத்திற் கனுகுணமாக எதையும் செய்து நற்பலனடைய முடியாது. எவ்வகையிலும் சுகியாக விருந்து சத்கீர்த்தியுடன் வாழமுடியாமற் போய்விடும். கிருஷி செய்பவனும் காலமறிந்து பயிர் செய்தால் தான் பலனடைய முடிகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இதுபோன்ற விஷயங்களுக்கு ஜாதகம் இருந்தால் தான் இம்மாதிரியானவைகளை தெரிந்து நற்பலனை அடையமுடியும்.

## துவாதச பாவங்களால் ஜாதக மூலமாக நாம் தெரிந்துகொள்ளக் கூடியவைகள்

ஒவ்வொரு ஜாதகத்திலும் 12 பாவங்கள் (ஸ்தானங்கள்) உண்டு. அவைகளுக்கு லக்னுதியாக எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

(1) லக்ன பாவத்திலிருந்து சரீர ரூபலக்ஷணம், ஆரோக்கியம் சுபாவ குணங்கள், லோகபூஜிதை ஆகிருதி முதலியவற்றையும் ;

(2) இரண்டாம் பாவத்திலிருந்து வாக் ஸாமர்த்தியம், தனம், குடும்ப விருத்தி, குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் உதவி, நேத்ரம், பொதுவாக களத்திராதிகளாலும் ஸ்வயார்ஜிதம் பூர்வீக தனத்தினுலும் புத்திராதிகளினுலும் ஸௌக்கியம், ஸமர்த்திகள் எப்படி என்பதையும் ;

(3) மூன்றும் பாவத்திலிருந்து பராக்கிரமம், ஆடை, ஆபரணுதிகள், சகோதரர்களின் நிலைமை, அவர்களால் அனுகூலங்கள் எப்படி, பூர்வீக மூலதனம் (பூமிகள் கிரகங்கள்) கண்டஸ்வரம், தவனி இவைகளையும் ;

(4) நான்காம் பாவத்திலிருந்து வாகனுதிகள் சுகானுபவங்களின் நிலை, பந்து ஜனங்கள், சிநேகிதர்களின் உதவி, வித்யை கல்வி கேள்விகள், மாத்ரு ஸௌக்கியம், உத்ஸாஹம், வாஸகிரஹம், பொன் பொருள்கள் ஜயாபஜயம் வேகுக்கை விநோதம் முதலியவைகளையும் ;

(5) ஐந்தாம் பாவத்திலிருந்து பிதா பூர்வபுண்யம், ஆத்மபக்தி ஞானம், புத்திரர்கள், ராஜ ஸன்மானம், புத்தியின் போக்கு தீக்ஷண்யம் ஆகிய இவைகளையும் ;

(6) ஆறும் பாவத்திலிருந்து ரோகம், கடன்கள், சத்ரு பாதைகள், சிந்தை, மனஸ்தாபங்களின் நிலைமை அதன் குரூரம் இவைகளையும் ;



(7) ஏழாமிடத்திலிருந்து, களத்ரம், (பத்னி) தாம்பத்யபலன், பர்த்தா, யாத்ராயோகம், அதன்மூலம் ஏற்படும் சுபாசுப பலன்களையும் ;

(8) எட்டா மிடத்திலிருந்து ஆயுள் எவ்வளவு; அதுவரையில் ஏற்படக்கூடிய சுபாசுப பலன்கள், ஸ்திரீ ஜாதகங்களில் மாங்கள்ய யோகம், அபமிருத்யு, கஷ்டங்கள், ஆபத்துக்கள் இவைகளையும் ;

(9) ஒன்பதாம் இடத்திலிருந்து ஸர்வ பாக்யமும் அதாவது அதிருஷ்டம் பூர்வீக பாக்யங்கள் ஸ்வார்ஜித பாக்யங்கள், புத்திர களத்திர பௌத்ர தௌஹித்ராதிகளின் மூலமான பாக்கியங்களைத் தான் அடையும் நிலைகள், அதன் எல்லை முதலியவைகளையும், தபஸ் செய்தல், யோகியாகுதல் தர்ம கார்யங்கள், புண்ய கார்யங்களைச் செய்தல் இத்யாதிகளையும். நிதி கிடைத்தல், சமாதிநிலை, சித்தியடைதல் முதலியவற்றையும் ;

(10) பத்தாம் பாவத்திலிருந்து ஸத்கர்மாக்களை அனுஷ்டித்தல், ஜீவனோபாயம், தொழில் உத்யோகம் ஸிங்காஸன ஆதிபத்தியத்தை அடைதல், ஸத்கீர்த்தி, பிரம்மசர்ய - விரக்த - வைராக்ய-வானப்ரஸ்த சன்யஸ்த ஆச்ரம யோகங்கள் முதலியவை எப்படிப்பட்டவை என்பதையும் ;

(11) பதினோரா மிடத்திலிருந்து எவ்வெவ் வழிகளில் எப்படி எந்தெந்த காலங்களில் எவ்வளவு லாபமடைய பிராப்தம் இருக்கிறது என்பதையும் ;

(12) பன்னிரண்டா மிடத்திலிருந்து நல்ல வழியாலோ கெட்ட வழியாலோ தனத்தை செலவு செய்வதின் நிலை, சயனஸௌக்யம், மோக்ஷபலன் முக்தியடைதலின் நிலை முதலியவைகளையும் ;

இதைப்போலவே ஜாதகயோகத்திற் கனுகுணமாக இந்த அஷ்ட ஐசுவரிய பலத்தின் விசேஷங்களுக்குத் தக்கபடி சிலவற்றைச் சேர்த்துப் பலன் சொல்லவும், சிலவற்றை குறைத்துப் பலன்கூறவும் சந்தர்ப்பம்போல் ஜோதிஷர்களுக்கு ஸ்வய அதிகாரம் பூர்ணமாக உண்டு. இதை ஜோதிஷர்கள் மறக்கலாகாது. எப்படியெனில் 2-வது ஐசுவரியமான வாக்ஸ்தானாதிபதியின் பலவீனத்தால் ஊமையாக இருக்கும்படி ஒரு ஜாதகனுக்கு ஏற்பட்டுவிடுகின்றது என்று வைத்துக்கொள்ளுவோம். இது போன்றிருப்பதுண்டு. இதே ஜாதகத்தில் சுக்கிரன் உச்சனாகி இருந்து அந்த தசையும் வரக்கூடும். ஆனால் இப்படி சுக்கிரன் உச்சனாகி இருந்தால் அந்த ஜாதகன் சங்கீதம் பாடுவதிலும் ஸபா பிரசங்கம் செய்வதிலும், சாஸ்திரார்த்தம் வாதவிவாதம் செய்வதிலும் நிபுணனாகி இருப்பான் என்று பிரமாணம் இருக்கின்றது. இப்பலனை ஊமையாக இருப்பவன் அடையமுடியுமா? முடியாதல்லவா! இதை யறிந்து ஜாதகபலனை பொருத்தமாக ஜோதிஷர்கள் சொல்லவேண்டும். இதைப்போன்றே ஒரு ஜாதகத்தில் புத்திர ஸ்தானமும், தர்மகர்ம ஸ்தானமும் குடும்ப ஸ்தானமும் பலமாக இருக்கின்றது என்று வைத்துக்கொள்வோம் அதன் பலன் புத்திரர்களால் ஜாதகர்கள் விசேஷமான சுபபலனை அடைவாரென்று பிரமாணம் இருக்கின்றது. அதே மேற்படி ஜாதகத்தில் களத்திரம் கிடையாதென்றோ விவாகமே ஆகாதென்றோ சொல்ல சில ஆதாரங்கள் தென்படலாம். இப்படி களத்திர பாவம் பலஹீனமாக இருந்தாலும் களத்திரம் உண்டு என்று சொல்ல, ஜோதிஷர்களுக்கு ஸ்வய அதிகாரம் பூர்ணமாக உண்டு. இதுபோன்றவைகளை அறிந்து பொருத்தமாக பலன் சொல்லவேண்டியது ஜோதிஷர்

வருக்கும் சில குண விசேஷங்களும் அதிருஷ்டயோகங்களும் ஜனிக்கும் போதே அமைந்து விடுகின்றன. இது விஷயம் யானையாகவோ எருமையாகவோ ஜனிப்பது போன்றதும் கருடனுகவோ கோட்டானுகவோ ஜனித்து விட்டது போன்றதுமாகும். கஷ்ட சுகங்கள் இவைகளுக்கு மாறலாம். அதனுல் பிறவிக் குணம் மாற முடியாதல்லவா! இதைப் போன்றது தான் ஒவ்வொருவருக்கும் பாக்ய பலனுலமையப்பெரும் குணுதிசயங்களும் அதிருஷ்டங்களுமாகும். இந்த அஷ்ட ஐசுவரியங்கள் நன்ருக அமையப் பெற்றவர்களே பாக்யசாலிகளென்றும் அதிருஷ்டவந்தர்களென்றும் சொல்லப்படுகிருர்கள். இது போன்றமையப் பெற்ற ஜாதக குணுதிசயங்களுக்குத் தக்கபடியும், பாக்கிய விசேஷத்திற் கனுகுணமாகவும் தசானுஸாரமாய் ஒரு சில விஷயங்களே சமயம் போல் சற்று ஏற்றத் தாழ்வாக மாறக்கூடியதும் நம்மால் மாற்றிக் கொள்ளக் கூடியதுமாகவிருக்கின்றன. அதாவது மற்ற மூன்று பாவங்கள் அவை 10—ஜீவனம், தொழில்; 11—லாபம்; 12—விரயம் என்பவைகளாகும். இவைகளை நம்முடைய தசாபோக கால பலன்களுக்குத் தக்கபடி மாற்றிக் கொள்ளலாம். இதற்கு நமக்கு அதிகாரமுண்டு. எப்படியெனில், நாம் உத்தியோகமோ, வியாபாரமோ செய்கிறோம். அதில் ஏற்படும் லாப நஷ்டங்களுக்குத் தக்கபடி நாம் அதை விடவும் கூடும். மறுபடி அடையவும் கூடும். இதைப் போன்றதல்ல லக்னுதியாக உள்ள எட்டு பாவங்களின் பலன்கள். உதாரணமாக எட்டாமிடத்தினுல் சொல்லப்படும் 8-வது ஐசுவரியமான ஆயுள். இது நம் இஷ்டத்திற் குட்பட்டதல்ல; அது பூர்வ பாக்யத்தினுல் எவ்வளவு நாட்கள் ஏற்பட்டுள்ளதோ. அது மாருமல் அப்படியே நடந்து தீரும். இதை நாம் நம்

ம். அவயோக ஜாதகமாக விருந்து சில காலம்
ரம் செய்ய யோகம்வரின் இதை ராவண ராஜ்ய
ந போன்றும், பாவித்து பலன் சொல்ல வேண்
வர்கள் ஜனன கால விசேஷம் எப்படியோ
அனுஸரித்தபடியே தான் தசாயோக கஷ்ட காலம்
தும், பலனும் கீர்த்தியும் இவர்களுக்கு நிலையாக
விடும். இது தான் ஜாதக யோகத்திற்கும் தசா
க்கு முள்ள வித்யாஸம், தராதரம், தாரதம்யம்.
ப் போலவே ஒரு பிரபல ராஜயோக ஜாதகர்களுக்கு
த்திரத்தை அனுபவிக்க வேண்டிய கஷ்டதசை வரி
அதே மாதிரி தரித்திர ஜாதகனுக்கு ராஜயோக
வரினும், இதை அவர்கள் அனுபவிக்க மாட்டார்கள்,
னுபவிப்பதில்லை. உதாரணமாக ஜாதக பலமில்லாத
தரித்திரனுக்கு தசா பலத்தால் ராஜ்யம் கிடைத்தால்
மிக சந்தோஷத்தினாலும் ஜாதக பலமுடைய ஒரு ராஜா
கு தசாபலனால் தரித்திரம் வந்தால் அவமானம்,
க்கவலை அதிகத்தினாலும் அதிர்ச்சியினாலும் மர
த்தையாவது அடைந்து விடுவார்களே யொழிய
ப்பலனை இவர்கள் அனுபவிக்கமாட்டார்கள்,
னுபவிக்கிறதில்லை. இது விஷயம் சாஸ்திர சம்மதமும்,
ரத்யக்ஷ அனுபவமும் ஆகும். அதற்காகவே தான்
கலரும் தம் ஜாதக யோகம் எப்படிப்பட்டதென்பதை
அறிந்து அதற்கு அனுகுணமாகப் பலனடைய முயற்சி
செய்ய வேண்டும் எனப்படுகின்றது. எம்மாதிரியான
ஜாதகர்களுக்கும் சமயோக தசை வந்தால் மாத்திரம்
தான் பலன்கள் நீடித்து நிலைக்க முடியும். இதை முதலில்
ஜாதகர்களும் ஜோதிஷர்களும் அறிய வேண்டியது மிக
வும் அவசியமாகும். இப்படித் தெரிந்து கொள்ளாமல்
மனம் போனபடி யெல்லாம் பலனடைய முயல்பவர்கள்

ஒரே நக்ஷத்திரமாக இருக்கக் கூடும். இப்படி யுள்ளதில் கோசாரயோகங்களின்படி பலனை ஒரே மாதிரியாக இருவருக்கும் சொல்லுவதற்கில்லை.. இது போல் சொல்லும் பலன்கள் கிஞ்சித்தும் அனுபவத்தில் சரியாகவிரா. எப்படி எனில் இவ்வாறுள்ளதில் ஒருவர் தண்டனை விதிக்கிறார்; அதே சமயத்தில் மற்றொருவர் தண்டனையை அடைகிறார். இப்படி யேற்படுவதற்கு மூலகாரணமாக உள்ளது எது என்பதை நாம் கவனித்து யோசித்துப் பார்க்க வேண்டும். அதாவது நீதிபதியாகவோ் குற்றவாளியாகவோ ஆவதற்கும் இது போன்றிருப்பதற்கும் பலனடைதற்கும், ஜனனகால ஜாதகயோகமும் தெசையின் பலமுந்தான் மூலகாரணமே தவிர இந்த நக்ஷத்திர கோசாரபலனல்ல. ஆனால் கோசாரத்திற்கும் பலன் உண்டு என்பதை நாம் மறக்கலாகாது அப்பலன்கள் அவரவர்களின் அந்தஸ்துக்கு தக்கபடி மாறுபடும். இதையறிந்து சொன்னால்தான் கோசாரபலன்கள் பொருதத மாகவும் சரியாகவு மிருக்கும். கோசார பலனில் அஷ்டமத்தில் சந்திரன் - சனி - குரு - செவ்வாய் இவர்களிருந்தால் முறையே ஸ்தாந ப்ரஷ்டம், மானஹானி, சிறைவாசம், கொலை களவுகளில் சம்பந்தப்படுதல், மனச் சஞ்சலம், சரீர அனாரோக்யம், இன்னும் அநேக விதமான கஷ்ட பலன்கள் ஏற்படும் என்று சொல்லப்படுகிறது. இதில் ஏதேனும் சிலவற்றை ஜாதகரின் அந்தஸ்திற்கும் குணத்திற்கும் தெசா யோகத்திற்கும் தகுந்தபடி இரண்டொன்றை சொன்னால் தான் பொருத்தமாக இருக்குமே தவிர, அதனைக் கவனிக்காமல் கோசாரபலன் புத்தகத்தில் படித்ததை அப்படியே ஒப்பிப்பின் இதுபோல் சொல்லும் பலன்கள் 100-ல் ஒன்று சரியாக விருப்பதும் துர்லபம். இப்படி ஆழ்ந்து யோசிக்காமல் அஷ்டமச்

செய்யவேண்டும். இதுபோல் செய்பவர்களும் இம்மாதிரியான கிரமத்தில் இந்த கோசாரபலனை ஜாதகர்களுக்குப் பொருந்தும்படி சாஸ்திர யுக்தமாக சதுர புத்தியுடன் சொல்லும் ஜோதிஷர்களும் தான் பரஸ்பரம் நற்பலனையும் புகழையும் அடையமுடியும். இதற்காகவே தான் "பாவானுஸாரேண தசாமுபைதி, தசானுஸாரேணபலம் வதந்தி" என்கிறபடி ஜாதகத்துவாதச (12) பாவங்களுக்குத் தக்கபடியே தான் தசைகள் பலனளிக்கும் என்றும் இந்த தசா யோகத்தை யனுஸரித்தே கோசார பலனிருக்கும் என்றும் மேலே சொல்லப்பட்டுள்ள பிரமாணமானது நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இதைப் போலவே தான், ஒரு சில நக்ஷத்திரங்களை மாத்திரம் கொண்டு சொல்லப்படும் பலன்களும் சரியாக விரா. எப்படி எனில் உதாரணமாக ரோகிணீ நக்ஷத்திரத்தில் புத்திரன் ஜனித்தால் பலர் மாமாவுக்கு ஆகாது என்பார்கள். இம்மாதிரி தோஷமாக நினைப்பதற்கு சாஸ்திரத்தில் விஷயம் எதுவும் காணப்படவில்லை. மாமாவுக்கு விசேஷ சுப பலன்களை அளிக்கக் கூடிய ரோகிணீ நக்ஷத்திர ஜாதகங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. அனேகம் உண்டு. அப்படியிருக்க இதற்கு காரணம் கூறும் ஜோதிஷ சாஸ்திர மறியாத வெறும் வைதிக ஆஸ்திகர்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவான் ரோஹிணீ நக்ஷத்திரத்தில் ஜனித்தார் என்றும் அவர் தனது மாமாவாகிய கம்ஸனைக் கொன்றாரென்றும் அதற்கு எடுத்துக் காட்டாகக் கூறுகிறார்கள். இவர்கள் இதில் ஒரு விஷயத்தை அறியாதது தான் மிகவும் வருந்தத் தக்கதாக விருக்கின்றது. அதாவது ரோகிணி நக்ஷத்திரத்தில் ஜனித்தவர்கள் எல்லோரும் ஸ்ரீ கிருஷ்ண பகவானைப்போல் தெய்வாம்சமாக ஜனிப்பதுமில்லை.